विद्योदयग्रन्थमाला २—द्वितीयं पुष्पम् ॥

॥ श्रीः ॥

श्रीशृङ्गेरी जगद्गुरुमहासंस्थानं श्रीशारदापीठम् ।

# ॥ प्रह्लादस्तुतिः ॥

## ப்ரஹ்லாதஸ்துதி.



PUBLISHED BY

THE SRINGERI MATH,

SRINGERI

Price 6 As.

विद्योदयग्रन्थमाला २—द्वितीयं पुष्पम् ॥

# ॥ प्रह्लादस्तुतिः ॥

# ப்ரஹ்லாதஸ்துதி.



Text in Sanskrit and Tamil
with Tamil Translation and Notes

BY

**N. S. ANANTHAKRISHNA SASTRI,**

**Vedantha Siromani,**

**NURANI, PALGHAT**



*Published on the occasion of*
*the Navarathri Puja Celebrations*
*of His Holiness at Kaladi in October 1956*

BY

THE SRINGERI MATH,

SRINGERI

॥ श्रीरस्तु ॥

॥ श्रीगुरुचरणारविन्दाभ्यां नमः ॥

# முன்னுரை.

---

कौमार आचरेत् प्राज्ञो धर्मान् भागवतानिह ।
दुर्लभं मानुषं जन्म तदप्यध्रुवमर्थदम् ॥

கௌமார ஆசரேத் ப்ராக்ஞோ தர்மான் பாகவதாநிஹ ।
துர்லபம் மானுஷம் ஜன்ம ததப்யத்ருவமர்த்ததம் ॥

என்று ஸ்ரீமத் பாகவதநூலிலுள்ள உபதேசம். இது பக்த குலதிலகராகிய ப்ரஹ்லாதாழ்வார் தனது நண்பர்களுக்கு கூறிய புத்திமதி. புத்திசாலி தனது பால்யத்திலேயே சிறந்த தர்மங்களைச் செய்யவேண்டும். அவைகள், பகவானுடைய அருளைப் பெறுவதற்குக் காரணங்களாக அமைய வேண்டும். தனது இந்திரியங்களைத் தற்சமயம் சந்தோஷிக்கச்செய்து; பிறகு துன்பங்களுக்குக் காரணமாக முடியும் இன்பங்களுக்கு வசப்படாமல் அழிவற்ற சுகத்தை அளிக்கும் பரமனுடைய குணாதிசயங்களை கேட்குதல, கூறுதல், நினைத்தல், சான்றோர்களுடன் ஸகவாசம் செய்தல் முதலிய நற்செயல்களை செய்யவேண்டும். இந்த மானிடப்பிறவி அரிது. அது நான்கு புருஷார்த்தங்களையுமளிக்கக்கூடியதாயினும் நிலையற்றது. ஆகையால், 'காற்றுள்ளபொழுதே தூற்றிக்கொள்' என்ற பழமொழியைப் பின்பற்றி மனதை பரமனிடம் அர்ப்பணம் செய்ய முயலவேண்டும் என்று மேற்கூறிய செய்யுளின் கருத்து. இளமவயதிலிருந்தே பகவானை பூஜை செய்ய முயற்சிக்காவிடில், காளைப்பருவத்தில் பற்பல சிற்றின்பங்களாலும், சுற்றத்தார்களாலும் இடையூறுகள்

குறுக்கிடுகின்றன. முதுமையில் வியாதி முதலியவைகள் ஆட்சி செலுத்துவதால் பகவானைப் பூஜித்தல் பூஜ்யம்தான். இளமையிலிருந்து இடைவிடாது கிரமமாக செய்யப்படும் செயல்கள் மேல்வயதிலும் தொடருமாகையால் பக்திமார்க்கத்தின் வேருன்றல் சிறு வயதிலிருந்தே மிக்க அவசியமென விளக்கப்படுகிறது.

பிரஹ்லாதருடைய நிகரற்ற பக்திக்குக் காரணம் மாமுனிவராகிய நாரதருடைய அருள் என்பதையும் அந்த பக்தசிகாமணி கூறுகிறார்.

'मुख्यतस्तु महत्कृपयैव भगवत्कृपालेशाद्वा'

'முக்யதஸ்து மஹத்கிருபயைவ பகவத்கிருபாலேசாத்வா' என்று நாரதபக்திசூத்திரம். சான்றோர்களுடைய கருணையினாலும் இறைவனுடைய அருளின் லவலேசத்தினாலும்தான் பக்தி நிலவுகின்றது என்று அந்த சூத்திரத்தின் பொருள். மகான்களுடைய கருணை கிடைப்பதரிது. எப்பொழுது நிலவுமெனபதும் அறிதற்கரிது, அந்த அருள் வீண்போகாது; மட்டுமன்றி சிறந்த பயனையளித்துப் பிறவிக்கடலைக் கடக்கும்படிச் செய்கின்றது.

'महत्सङ्गस्तु दुर्लभोऽगम्योऽमोघश्च'

'மஹத்ஸங்கஸ்து துர்லபோऽகம்யோऽமோகச்ச' என்ற நாரதபக்திசூத்திரம் மேற்கூறிய விஷயத்திற்கு ஆதாரம். மிகச் சிறந்த பதவியில் இருப்பவனாயினும் சான்றோர்களுடைய சினத்திற்குப் பாத்திரமாகுவானாகில் தனது பதவியை இழந்து கடூரப்பிறவியில் பிறந்து உலகங்களுக்கு துன்பங்களை விளைவித்து மிக்கக் கொடியவன் என்று உலகங்களால் வெறுக்கப்படுகிறான். கடூரச்செயல்களாற்றும் கொடியகுலத்தில் பிறந்தவனாயினும் மகான்களுடைய கரு

ணைக்கு உரிமை பெற்றால் உலகம் யாவும் புகழும் சிறந்த நற்குணங்கள் குடிகொண்டவனாகவும் பரமபக்தசிகாமணியாகவும் பிறருக்கு நன்மைகளையே செய்பவனாகவும் தன்னலம் கருதாதவனாகவும் ஒருவன் விளங்குகிறான் என்பதற்கும் ஸநகாதிகளுடைய சாபத்தினால் வைகுண்டலோகத்திலிருந்து நழுவி அசுரத்தன்மையை அடைந்த 'ஹிரண்யகசிபுவும்,' நாரதமாமுனிவருடைய நிஷ்கபடமாகிய கருணையைப்பெற்ற 'பிரஹ்லாதஸ்வாமியும்' சான்று என்பதில் சந்தேகமில்லை.

அருவப்பொருளாயினும் உருவமுள்ளதென்று கருதுகின்றவர்களுக்கு சிறந்த வைகுண்டலோகத்திலிருந்து அருள்புரிகின்றதுமாகிய பரம்பொருள் ஒரு நொடியில் தனது வாஸஸ்தலத்தை விட்டு ஹிரண்யனுடைய அரண்மனையில் இரத்தினங்கள் இழைத்த தங்கத்தூணிலிருந்து தோற்றமளித்த செயல், நிகரற்ற பக்திச்செல்வவந்தனான பிரஹ்லாதனுடைய 'வசனத்தை' உண்மையாக்குவதற்காகத்தான என்பது திண்ணம். அத்தகைய பக்தசிகாமணியின் பக்தியின் சிறப்பு, ஸ்ரீமத் பாகவதநூலின ஏழாவது ஸ்கந்தத்தில் பத்து அத்தியாயங்களில் இடம் பெற்றது என்றால் அதன் உயர்வை அற்பர்களால் கூறுதலியலாதன்றோ!

நாரதமாமுனிவர் யுதிஷ்டிராருக்கு சிசுபாலனுடைய முன்ஜன்ம வரலாற்றைக் கூறுகையில் ஹிரண்யகசிபுவின் கதையை விளக்குகிறார். அந்த ஹிரண்ணியனுடைய புதல்வராகிய பிரஹ்லாதஸ்வாமியின் பக்தியின் சிறப்பை சிந்தனையில் கொணரவேண்டியது மிக்க அவசியம்.

**यस्मिन् महद्गुणा राजन् गृह्यन्ते कविभिर्मुहुः ।**
**न तेऽधुना पिधीयन्ते यथा भगवतीश्वरे ॥**

.[भा. स्क. 7, अ. 4, श्लो. 34]

யஸ்மின் மஹத்குணு ராஜன் கிர்ஹ்யந்தே கவிபிர் முஹு: ।
ந தே஽துநா பிதீயந்தே யதா பகவதீச்வரே ॥

[நாரதர் கூறிய செயுட்களின் பொருள்—

அரசே! எவனிடத்தில் (பிரஹ்லாதனிடத்தில்) உள்ள நற்குணங்கள் அறிஞர்களால் அடிக்கடி எடுத்துக்கூறப்படுகின்றனவோ (கையாளப்படுகின்றன.) அச்சுதனிடத்திலுள்ள சிறந்த நற்குணங்கள் பிரளயகாலத்திலும் எவ்வாறு அழிகின்றனவில்லையோ, அதுபோலவே இவரிடமுள்ள நற்குணங்களும் இப்பொழுதும் (எவ்வளவு காலமாயினும்) அழிவதில்லை. (சிலரிடத்தில் நிலவும நற்குணங்கள் காலத்தினால் மாற்றமடைதல் உண்டு. இவரிடம் அவ்வாறில்லை)

यं साधुगाथासदसि रिपवोऽपि सुरा नृप ।
प्रतिमानं प्रकुर्वन्ति किमुतान्ये भवादृशाः ॥
[भा. स्क. 7, अ. 4, श्लो. 35]

யம் ஸாதுகாதாஸதஸி ரிபவோ஽பி ஸுரா ந்ருப ।
ப்ரதிமானம் ப்ரகுர்வந்தி கிமுதான்யே பவாத்ருசா: ॥

அரசே! சான்றோர்களுடைய அவையில் மகான்களுடைய சரித்திரங்களை உரைக்கையில் அசுரர்களுக்கு பகைவர்களாகிய தேவர்கள் கூட பக்தியின் சிறப்பிற்குச் சான்றாக அந்த பிரஹ்லாதனுடைய பக்தியை புகழ்கின்றனர். அப்படியிருக்கையில், தங்களைப்போன்ற கிருஷ்ணபக்தர்களாகிய மற்றவர்கள் புகழ்வதைப் புகலவேண்டுமோ?

गुणैरलमसंख्येयैर्माहात्म्यं तस्य सूच्यते ।
वासुदेवे भगवति यस्य नैसर्गिकी मतिः ॥
[भा. स्क. 7, अ. 4, श्लो. 36]

குணைரலமஸங்க்யேயைர்மாஹாத்ம்யம் தஸ்ய ஸூச்யதே ।
வாஸுதேவே பகவதி யஸ்ய நைஸர்கிகீ மதி: ॥

(மேலும்) எண்ணிறந்த அவரது குணங்களை கூறமுடியாது. அவருடைய மகிமை சுருக்கி கூறப்படுகிறது. அதாவது பகவானுகிய வாஸுதேவரிடத்தில் அந்தப் பிரஹ்லாதருக்கு நிலவிய பற்று இயல்பேயாகும். (இதுவே சுருக்கமும் விளக்கமும். இயல்பு மாறுதன்றே!)

न्यस्तक्रीडनको बालो जडवत्तन्मनस्तया ।
कृष्णग्रहगृहीतात्मा न वेद जगदीदृशम् ॥
आसीनः पर्यटन्नश्नन् शयानः प्रपिबन् ब्रुवन् ।
नानुसन्धत्त एतानि गोविन्दपरिरम्भितः ॥

[ भा. स्क. 7, अ. 4, श्लो. 37, 38 ]

ந்யஸ்தக்ரீடனகோ பாலோ ஜடவத்தன்மனஸ்தயா ।
க்ருஷ்ணக்ரஹக்ருஹீதாத்மா ந வேத ஜகதீத்ருசம் ॥
ஆஸீன: பர்யடன்னச்னன் சயான: ப்ரபிபன் ப்ருவன் ।
நாநுஸந்தத்த ஏதாநி கோவிந்த பரிரம்பித: ॥

பாலனுக இருக்கையிலேயே தனது இளமைக்குரிய விளையாட்டில் மனம் செல்லாதவன். பகவானிடம் மனம் செலுத்தியமையால் பித்தன்போல் இயங்குவான். ஸ்ரீகிருஷ்ணனுகிய கிரஹம் பிடித்த மனமுடைய அவன் இந்த பிரபஞ்சத்தை அதன் நிலைமையில் உணரவில்லை. நின்றுகொண்டும், நடந்துகொண்டும், உணவு உட்கொண்டும், படுத்துக்கொண்டும், நீர் அருந்திக்கொண்டும், ஸம்பாஷணை செய்து கொண்டும் (மற்றவர்கள்போல் செயலாற்றினபோதிலும்) தனது செய்கைகளை வேற்றுமையுடன் உணரவில்லை. ஏனெனில், கோவிந்தபரிரம்பித: = இந்தரியங்களுக்கெல்லாம் அதிபதியும் பிரவர்த்தகருமாகிய ஸ்ரீமன் நாராயணனுல் அந்த பிரஹலாதன் ஆலிங்கனம் செய்யப்பட்டவன். தன்மய

மாகவே மாறிவிட்டான். ஜீவன், பரமாத்மாவை தியானம் செய்து, அவரை ஆலிங்கனம் செய்துகொள்வதாக மனதில் பாவனை நிலவுகையில் மெய் மறந்து உலகத்தையும் மறந்து விடுகிறான். இந்த நிலைமை வியப்பை அளிக்கிறது. பக்தர்களால் தியானம் செய்யப்பட்ட பகவான் தனது அடியானை ஆலிங்கனம் செய்வதனுல், அந்த ஜீவன் பரமாத்மமயமாக மாறுதல் என்ற நிலைமையின் சிறப்பு சிந்தனைக்கும் அப்பாலானது என்பதில் ஐயமில்லை.

இந்நிலைமை இந்த பக்தசிகாமணிக்கு நிலவியதின் காரணத்தை யோசிப்போம். பதிவிருதைகளின் முன்னணியில் விளங்கும் 'சயாது' (ஹிரண்யனுடைய மனைவி) செய்த தவப்பயன். அவள் கர்ப்பிணியாக இருக்கையில், ஹிரண்ய கசிபு தவம்செய்ய மந்தரமலைக்குச் சென்றான். அவன் திரும்பிவருவதற்குள், இந்திரன் கயாதுவை அபகரிக்க முயன்றான். நாரதமாமுனிவர், குறுக்கிட்டு, அந்தப் பெண்மணியைக் காப்பாற்றினர். கருவிலிருக்கும் செல்வத்திற்கு மாமுனிவர் சிறந்த அருளையளித்தார். பரமனது மகிமையையும், அவர் அடியார்களை அனுக்கிரஹம் செய்யும் கிரமத்தையும், பக்தியின் பெருமையையும் இடைவிடாது அநேக மாதங்கள் அவர் கூறியது, கருவிலிருக்கும் சிசுவின் நன்மைக்காகவே என்பதில் ஆக்ஷேபமில்லை. ஆகையால், பெண்மணிகள், விசேஷமாக கருச்செல்வத்தைபபெற்ற காலங்களில் தெய்விகமான சரித்திரத்தொகுதியை கேட்டு இன்புற வேண்டியதவசியம். பாலனுகிய பிரஹ்லாதனுடைய பக்தியின் வன்மை இளமையிலேயே, பக்திபெறப் பயிலவேண்டும் என விளக்குகிறது. ஆகையால்தான், இந்தப் பக்தாத்னமாகிய பிரஹ்லாதனுடைய வசனத்தை இந்த முன்னுரையின் ஆரம்பத்தில கூறியுள்ளோம்.

ஸ்ரீ ஜகத்குரு சிருங்கேரி ஸ்ரீமதபிநவவித்யாதீர்த்த ஸ்ரீ சங்கராசாரியஸ்வாமிகள் அளித்த ஆக்ஞை இணையில்லாத துபற்றி சிரஸ்ஸினுல் வகித்து, 'विद्योदयग्रन्थमाला' 'வித்யோதயகிருந்தமாலை' என்ற தலைப்பில் வெளிவரும் பிரசுரங்களுக்கு प्रह्लादस्तुतिயின் கருத்தை உரைத்து மூலத்துடனும் உரையுடனும் கூடிய இந்தப் புஸ்தகத்தை அந்த கிரந்த மாலையின் இரண்டாவது மலராக தொகுத்து ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ சிருங்கேரி ஸ்ரீ சங்கராசாரியஸ்வாமிகள் அவர்களுடைய பாதகமலங்களில் ஸமர்ப்பணம் செய்துள்ளேன்.

இப்படிக்கு,
விதேயன்

N. S. Ananthakrishna Sastry,
(Vedantha Siromani)
*Retired Sanskrit Pandit.*

PALGHAT,
1—10—1956.

॥ श्रीरस्तु ॥

श्रीगुरुचरणारविन्दाभ्यां नमः ॥

श्रीकृष्णाय परस्मै ब्रह्मणे नमः ॥

# ॥ प्रह्लादस्तुतिः ॥

## ப்ரஹ்லாதஸ்துதி.



ब्रह्मादयः सुरगणा मुनयोऽथ सिद्धाः
सत्त्वैकतानमतयो वचसां प्रवाहैः ।
नाराधितुं पुरुगुणैरधुनापि पिप्रुः
किं तोष्टुमर्हति स मे हरिरुग्रजातेः ॥ १

ப்ரம்மாதய: ஸுரகணா முனயோऽத ஸித்தா:
ஸத்வைகதானமதயோ வசஸாம் ப்ரவாஹை: ।
நாராதிதும் புருகுணைரதுநாபி பிப்ரு:
கிம் தோஷ்டுமர்ஹதி ஸ மே ஹரிருக்ரஜாதே: ॥ 1

ஸத்வகுணத்தையே முக்கியமாகக்கொண்டவர்களும், பிறப்பில் சிறந்தவர்களுமாகிய பிரம்மன் முதலிய தேவர்களின் கூட்டங்களும், தபஸ்ஸித்திபெற்ற முனிவர்களும் சுவை நிறம்பிய இனிய சொற்களின் தொகுதிகளாலும் தமது நற்குணங்களாலும் புகன்று எவரை சந்தோஷமடையும்படிச் செய்ய முடிகிறதில்லையோ, அந்த பகவானை கடூரமான அசுரஜாதியில் பிறந்து ரஜஸ், தமஸ் என்ற குணங்களுக்கே தங்குமிடமாகிய நான் துதிக்கத் தகுதியுள்ளவனா?

[ பிறப்பினால் தனக்கு ஹரியை துதிக்க தகுதியில்லாவிடினும், பக்தியினால் உரிமையுண்டு என்று கூறுகிறார் :—

मन्ये धनाभिजनरूपतपःश्रुतौज-
स्तेजःप्रभावबलपौरुषबुद्धियोगाः ।
नाराधनाय हि भवन्ति परस्य पुंसो
भक्त्या तुतोष भगवान् गजयूथपाय ॥ २

மன்யே தனாபிஜனரூபதப:ச்ருதௌஜ-
ஸ்தேஜ:ப்ரபாவபலபௌருஷபுத்தியோகா: ।
நாராதனாய ஹி பவந்தி பரஸ்ய பும்ஸோ
பக்த்யா துதோஷ பகவான் கஜயூதபாய ॥ 2

(1) செல்வம், (2) சிறந்த குலத்தில் பிறப்பு, (3) உடலழகு, (4) தவம், (5) கல்வி, (6) பொறிகளின் திறமை, (7) தேகத்தின் ஒளி, (8) பிரதாபம், (9) உடல் வலிமை, (10) முயற்சி, (11) புத்தி, (12) எட்டு அங்கங்களுள்ள யோகங்கள் என்ற இவைகள் தனிமையாகவும் ஒன்றுசேர்ந்தும் பரமபுருஷனாகிய பகவானை சந்தோஷமடையும்படி செய்ய வல்லமையற்றவை. ஏனெனில், இவைகள் ஒன்றுமில்லாத யானையின்மீது பகவான் அருள்புரிந்தாரன்றோ? (ஆகையால், பக்தியே பரமனுடைய அருளை அடைவதற்கு அரிய உபாயம்.)

[ இவ்வாறு பகவான் பக்திக்கு வசப்பட்டுத்தான் கஜேந்திரத்திற்கு அருள் புரிந்தார் என்று கூறி, அந்த பக்தியில்லையேல் மற்ற எந்த குணங்களும் பயன்படா என்று விளக்குகிறார் :—

विप्रात् द्विषड्गुणयुतादरविन्दनाभ-
पादारविन्दविमुखाच्छ्वपचं वरिष्ठम् ।

मन्ये तदर्पितमनोवचनेहितार्थ-
प्राणं पुनाति स कुलं न तु भूरिमानः ॥ ३

விப்ராத் த்விஷட்குணயுதாதரவிந்தநாப-
பாதாரவிந்தவிமுகாத் ச்வபசம் வரிஷ்டம் ।
மன்யே ததர்ப்பித மனோவசனேஹிதார்த்த-
ப்ராணம் புநாதி ஸ குலம் ந து பூரிமானः ॥ 3

முன் செய்யுளில் கூறிய 12 குணங்கள் இருந்தபோதிலும் பத்மநாபருடைய பாதகமலங்களில் பக்தியற்ற பிராம்மணனைக்காட்டிலும் தன்னுடைய மனம், வாக்கு, செயல், செல்வம், உயிர், (மற்ற இந்திரியங்கள்) யாவற்றையும் பகவானுக்கே அர்ப்பணம் செய்தவன் சண்டாளனாயினும் அவன்தான் மிகச் சிறந்தவன் என்று நான் நம்புகிறேன். ஏனெனில், தனது உடல், பொருள், ஆவி ஆகிய யாவற்றையும் பகவானுக்கு அர்ப்பணம் செய்பவன் பரமபக்தன். அத்தகைய பக்தியினால் அவன் தனது குலத்தை மிகப் பரிசுத்தம் செய்கிறான். பக்தியற்றவனுடைய செல்வம் முதலியவை செருக்கிற்குக் காரணமாகின்றனவேயன்றி தன்னுடைய நற்கதிக்காவது பரிசுத்திக்காவது காரணமாகிறதில்லை. (எவ்வாறு குலத்தைச் சுத்திசெய்யும்? ஆகவே பக்தியற்றவன் அற்பன்.)

[இச்செய்யுளில் கூறியுள்ள 12 குணங்கள் :—
धर्मश्च सत्यं च दमस्तपश्च अमात्सर्यं ह्रीस्तितिक्षाऽनसूया ।
यज्ञश्च दानं च धृतिःश्रुतं च व्रतानि वै द्वादश ब्राह्मणस्य ॥

தர்மஸ்ச ஸத்யம் ச தமஸ்தபஸ்ச அமாத்ஸர்யம் ஹ்ரீஸ்திதிக்ஷாऽநஸூயா । யக்ஞஸ்ச தானம் ச திருதி:ச்ருதம் ச வ்ரதாநி வை த்வாதச பிராம்மணஸ்ய ॥ என்று திருதராஷ்ட்ரமகாராஜனிடம் ஸநத்ஸுஜாதரால் கூறப்படும் குணங்

கள்—(1) அவனவனுக்கு உரிய கடமை, (2) பிறனுக்கு ஹிம்ஸை விளைவிக்காத உண்மை கூறுதல், (3) பொறிகளை அடக்குதல், (4) சாந்திராயணம் முதலிய விருதங்கள், (5) பிறனுடைய குணங்களில் பொறுமையின்மை, (6) தகாத செயலில் ஈடுபடாமை, (7) சினம் கொள்ளாமை, (8) பிறருடைய குணங்களில் குறை கூறுமை, (9) வேள்வி செய்தல், (10) கொடை, (11) ஆபத்துக்காலத்திலும் தன்னுடைய விருதத்தைக் கைவிடாமை, (12) சிறந்த கல்வி என்ற 12 குணங்கள் முக்தியை அடைய விரும்புகிறவனுக்கு இன்றியமையாதவை. அல்லது,

शमो दमस्तपः शौचं क्षान्त्यार्जवविरक्तताः ।
ज्ञानविज्ञानसन्तोषाः सत्यास्तिक्ये द्विषड्गुणाः ॥

ச்மோ தமஸ்தப: சௌசம் க்ஷாந்தியார்ஜவவிரக்ததா: । க்ஞானவிக்ஞானஸந்தோஷா: ஸத்யாஸ்திக்யே த்விஷட்-குணா: ॥ (1) மனதை அடக்குதல், (2) பொறிகளின் அடக்கம், (3) தவம், (4) தூய்மை, (5) பொறுமை, (6) நேர்மை, (7) விருப்பின்மை, (8) ஞானம் (கல்வியினால்), (9) தன்னுடைய அனுபவத்திற்கு வந்த ஞானம், (10) ஸந்தோஷம், (11) ஸத்தியம், (12) தெய்வநம்பிக்கை என்பவை என்று கூறலாம். இவ்வாறு மூன்று விதத்தில் கூறப்பட்ட குணங்கள் 12-ம் இருந்தபோதிலும் பக்தியில்லையேல் அவன் சிறந்தவனல்லன்.]

[ஆனால், பிராகிருதனான ஜீவன்போல பகவான் அடியார்களுடைய செல்வம் முதலியவற்றை விரும்புகிறார் என்று எண்ணவேண்டாம் என்று கூறுகிறார்:—

नैवात्मनः प्रभुरयं निजलाभपूर्णो
मानं जनादविदुषः करुणो वृणीते ।

यद्यज्जनो भगवते विदधीत मानं
तच्चात्मने प्रतिमुखस्य यथा मुखश्रीः ॥ ४

நைவாத்மன: ப்ரபுரயம் நிஜலாபபூர்ணோ
மானம் ஜனாதவிதுஷ: கருணோ வ்ருணீதே ।
யத்யஜ்ஜனோ பகவதே விததீத மானம்
தச்சாத்மனே ப்ரதிமுகஸ்ய யதா முகஸ்ரீ: ॥ 4

பகவான் தனக்குத்தானே ஈசுவரன். ஸ்வயமாகவே, ஸ்வஸ்வரூபத்தினாலேயே பரிபூர்ணர். பிறர் செய்யும் உபசாரத்தினால் தனக்கு கௌரவத்தை விரும்புகிறாரில்லை. ஆயினும், கருணை நிரம்பியவராகலால் அறிஞனல்லாத ஜீவனுடைய உபசாரத்தை ஏற்றுக்கொள்கிறார். அவ்வாறு பூஜையை ஏற்பதற்கு கருணையே காரணமாகும். ஏனெனில், ஜீவன் பகவானுக்கு செல்வம் முதலியவைகளை அர்ப்பணம் செய்தல்போன்ற செயல்களின் பயன் ஜீவனுக்கே நிகழ்கின்றது. பகவான் பிம்பம்; ஜீவன் பிரதிபிம்பம். பிரதிபிம்பத்திற்கு நேரடியாக அலங்காரம் செய்தல் இயலாது. கண்ணாடியில் பிரதிபிம்பித்த முகத்தில் திலகம் தோன்றவேணுமாயின் அது பிம்பத்தில் இருக்கவேண்டுமல்லவா? அதுபோலவே, பகவானிடம் அர்ப்பணம் செய்யும் பொருள் பிரதிபிம்பமாகிய ஜீவனுக்கு பயனளிக்கிறது.

तस्मादहं विगतविक्लव ईश्वरस्य
सर्वात्मना महि गृणामि यथामनीषम् ।
नीचोऽजया गुणविसर्गमनुप्रविष्टः
पूयेत येन हि पुमाननुवर्णितेन ॥ ५

தஸ்மாதஹம் விகதவிக்லவ ஈச்வரஸ்ய
ஸாவாத்மனு மஹி க்ருணாமி யதாமநீஷம் ।

நீசோऽஜயா குணவிஸர்கமநுப்ரவிஷ்ட:
பூயேத யேந ஹி புமானனுவர்ணிதேந ‖ 5

பக்தியே பகவானுடைய அருளைப் பெறுதலுக்கு முக்கிய காரணமாகையால், அற்பனுயினும் யான் அச்சம் நீங்கியவனுகவே எல்லா முயற்சியுடனும் எனது அறிவிற்கு எட்டினவாறு அந்த பகவானுடைய மகிமையைக் கூறுகின்றேன். ஏனெனில், அதனைக் கூறுவதினால் மாயையின் விளைவாகத் தோன்றிய இந்தப் பிரபஞ்சத்தில் சம்பந்தம் பெற்ற அஞ்ஞன் பரிசுத்தமடைகிறுன்.

[பகவானைத் துதிப்பதற்குத் தன்னுடைய உரிமையை உணர்ந்து, சினத்தைத் தணித்துக்கொள்ளும்படி இரண்டு செய்யுட்களால் வேண்டுகிறுர் :—

सर्वे ह्यमी विधिकरास्तव सत्वधाम्नो
ब्रह्मादयो वयमिवेश न चोद्विजन्तः ।
क्षेमाय भूतय उतात्मसुखाय चास्य
विक्रीडितं भगवतो रुचिरावतारैः ॥ ६

तद्यच्छ मन्युमसुरश्च हतस्त्वयाऽद्य
मोदेत साधुरपि वृश्चिकसर्पहत्या ।
लोकाश्च निर्वृतिमिताः प्रतियन्ति सर्वे
रूपं नृसिंह विभयाय जनाः स्मरन्ति ॥ ७

ஸர்வே ஹ்யமீ விதிகராஸ்தவ ஸத்வதாம்னோ
ப்ரம்மாதயோ வயமிவேச ந சோத்விஜந்த: ।
க்ஷேமாய பூதய உதாத்மஸுகாய சாஸ்ய
விக்ரீடிதம் பகவதோ ருசிராவதாரை: ‖ 6

தத்யச்ச மன்யுமஸுரச்ச ஹதஸ்த்வயாऽத்ய
மோதேத ஸாதுரபி வ்ருச்சிகஸர்ப்பஹத்யா ।

லோகாச்ச நிர்வ்ருதிமிதா: ப்ரதியந்தி ஸர்வே
ரூபம் ந்ருஸிம்ஹ விபயாய ஜனா: ஸ்மரந்தி ॥ 7

ஹே ஈசனே! பிரம்மர் முதலிய இந்த தேவர்கள் உண்மையாகவே தங்களிடம் பக்திகொண்டவர்கள். தங்களுடைய ஆக்ஞைப்படி நடக்கிறவர்கள். எங்களைப்போல் அச்சமுடையவர்களல்ல. தங்களுடைய அவதாரங்களால் உண்டான லீலைகள் உலகத்தின் க்ஷேமத்திற்கும் நன்மைக்கும் காரணங்களானவை. ஆகையால், ஸாத்விகபக்தர்களுடைய அனுக்கிரஹத்திற்காக கோபத்தைத் தணித்துக்கொள்வீர்களாக. எதற்காக இவ்வளவு பயங்கர உருவத்தை பெற்றுக்கொண்டீர்களோ அந்தக் காரியம் நிறைவேறியது. அசுரன் தங்களால் கொல்லப்பட்டான். தேள், பாம்பு முதலிய துஷ்டப்பிராணிகள் பிறருக்குத் துன்பம் விளைவித்து உயிரை எடுப்பதினால் பாபத்தை சம்பாதனை செய்துகொள்கின்றன. அந்தக் கடூரப்பிராணிகளைக் கொல்வதினால் நல்லவனும் உவகை கொள்கிறான். அதுபோல், ஹிரண்யகசிபுவின் வதையினால் தாங்கள் ஸந்தோஷமடைய வேண்டும். எந்த ஹிரண்யகசிபுவினால் உலகத்திலுள்ள சான்றோர்கள் துன்பமடைந்தனரோ, அந்த அசுரன் கொல்லப்பட்டமையால் உலகமும் ஆனந்தமடைந்தது. ஆகையால் தங்களுடைய சினம் தணிதல் மிக்க அவசியம். ஹே நரசிம்மரே! இந்த உருவத்தை மனதில் ஸ்மரணம் செய்வதினாலேயே ஒருவனுக்கும் அச்சம் நிலவாது.

[ இந்த உருவத்தைக் கண்டு, பிரஹ்லாதா! நீ அஞ்சுகிறாயா? அப்படியாகில் இதனை மாற்றிக்கொள்கிறேன் என்ற ஆட்சேபம் எழ அதற்கு விடை கூறுகிறார்:—

नाहं बिभेम्यजित तेऽतिभयानकास्य-
जिह्वार्कनेत्रभ्रुकुटीरभसोग्रदंष्ट्रात् ।

आन्त्रस्रजःक्षतजकेसरशङ्कुकर्णा-
न्निर्ह्रादभीतदिगिभादरिभिन्नखाग्रात् ॥ ८

நாஹம் பிபேம்யஜித தேऽதிபயானகாஸ்ய-
ஜிஹ்வார்க்கநேத்ரப்ருகுடீரபஸோக்ரதம்ஷ்ட்ராத் ।
ஆந்த்ரஸ்ரஜ:க்ஷதஜகேஸரசங்குகர்ணா-
ந்நிர்ஹ்ராதபீததிகிபாதரிபின்னகாக்ராத் ॥ 8

ஹே அஜித=யாராலும் ஜயிக்கமுடியாதவரே! மிக்க பயங்கரமான முகமும், நாவும், சூரியன்போல் ஜ்வலிக்கின்ற கண்களும், கோபம் நிரம்பிய புருவங்களும், கடூரமான பற்களின் தோற்றமும், குடல்மாலையை அணிந்ததும், உருதிரத்தினல் சிவந்த பிடரிமயிரும், சங்குபோல் மேலே தூக்கி நிற்கின்ற செவிகளும், அட்டஹாஸசப்தத்தினல் திக்கஜங்களை நடுங்கும்படிச் செய்கின்றதும், பகைவனைப் பிளர்ந்த நகங்களும் ஆகிய அவயவங்களையுடைய இந்த உருவத்தைக் கண்டு நான் அஞ்சுவதில்லை.

[என்னுடைய பீதிக்குக் காரணம் வேறு பொருள் உள்ளது என்கிறார்:—

त्रस्तोऽस्म्यहं कृपणवत्सल दुःसहोग्र-
संसारचक्रकदनाद्ग्रसतां प्रणीतः ।
बद्धः स्वकर्मभिरुशत्तम तेऽङ्घ्रिमूलं
प्रीतोऽपवर्गमरणं ह्वयसे कदा नु ॥ ९

த்ரஸ்தோऽஸ்ம்யஹம் க்ருபணவத்ஸல து:ஸஹோக்ர-
ஸம்ஸாரசக்ரகதனாத்க்ரஸதாம் ப்ரணீத: ।
பத்த: ஸ்வகர்மபிருசத்தம தேऽங்க்ரிமூலம்
ப்ரீதோऽபவர்கமரணம் ஹ்வயஸே கதா நு ॥ 9

தீனபந்துவே! தாளமுடியாத துன்பங்களுக்குத் தங்குமிடமாகிய ஸம்ஸாரத்தில் வினைகளால் கட்டுண்டு அதன் மத்தியில் அகப்பட்டு அந்தத் துன்பங்களுக்குத்தான் அஞ்சுகிறேன். ஒப்புயர்வற்ற அழகுடையவரே! என்மீது அன்பு புரிந்து முக்திக்குக் காரணமாகிய தங்களது திருவடியை அடைவதற்கு என்னை எப்பொழுது அழைத்துக் கொள்வீர்?

[பகவானுடைய அருளையடைவதற்கு 'தாஸ்யம்' என்ற பக்தி காரணம். அந்த தாஸ்யபக்தி உண்டாவதற்கு பற்பல ஜன்மங்கள் இடையூறுகளாகவிருக்கின்றன. ஆகையால் அவருடைய அருள் இருந்தால்தான் அந்த தாஸ்யமும் நிலைக்கும் என்கிறார்:—

यस्मात्प्रियाप्रियवियोगसयोगजन्म-
शोकाग्निना सकलयोनिषु दह्यमानः ।
दुःखौषधं तदपि दुःखमतद्धियाऽहं
भूमन् भ्रमामि वद मे तव दास्ययोगम् ॥ १०

யஸ்மாத்ப்ரியாப்ரியவியோகஸயோகஜன்ம-
சோகாக்னினா ஸகலயோநிஷு தஹ்யமாந: ।
துக்கௌஷதம் ததபி து:ககமதத்தியாऽஹம்
பூமன் ப்ரமாமி வத மே தவ தாஸ்யயோகம் ॥ 10

ஹே பூமன் = எங்கும் நிறைந்தவரே! பல பிறப்புக்களில் பிரியமான பொருள் பிரிவதாலும் பிரியமல்லாதவை சேருவதாலும் நிலவுகிற துக்கமாகிய அக்கினியினால் எரிக்கப்படுகையில், துக்கத்திற்குப் பரிஹாரம் என்று கருதி ஒன்றைக் கைப்பற்றுகையில் அந்தப் பொருளும் வேறுவிதத்தில் துக்கத்தையே அளிக்கிறது. தங்களுடைய மகிமையை அறியாமையால் பல துன்பங்களை அடைந்து மனக்குழப்-

பம் பெறுவதனுல் நிலையற்றவனுக இருக்கிறேன். அடியே னுக்கு தாஸ்யபக்தியை அருள்வீர்களாக.

[ தாஸ்யபக்தியிலும் இடையூறுகள் நேருகையில் துக்கங்கள் எவ்வாறு விலகும் என்ற சந்தேஹத்தை விலக்குகிறார் :—

सोऽहं प्रियस्य सुहृदः परदेवताया
लीलाकथास्तव नृसिंह विरिञ्चगीताः ।
अञ्जस्तितर्म्यनुगृणन् गुणविप्रमुक्तो
दुर्गाणि ते पदयुगालयहंससंगः ॥ ११

ஸோऽஹம் ப்ரியஸ்ய ஸுஹ்ருத: பரதேவதாயா
லீலாகதாஸ்தவ ந்ருஸிம்ஹ விரிஞ்சகீதா: ।
அஞ்ஜஸ்திதர்ம்யநுக்ருணன் குணவிப்ரமுக்தோ
துர்காணி தே பதயுகாலயஹம்ஸஸங்க: ॥ 11

தங்களுடைய அருளினுல் தாஸ்யபக்தியைக் கைப்பற்றிய நான் தங்களுடைய திருவடிமலர்களிலேயே பற்றுள்ள சான்ருேர்களுடன் ஸகவாஸம் நிலவி, பிரம்மதேவரால் கூறப்பட்டு உலகில் பிரசித்திபெற்ற தங்களது லீலாவிபூதிகளின் கதைகளைக் கூறிக்கொண்டு ரஜஸ், தமஸ்ஸுக்களாகிய குணங்களின் தோஷங்களை அகற்றி சிரமமின்றியே துன்பங்களை தொலைத்துக்கொள்வேன். ஹே நரஸிம்மரே! தாங்கள் பிரியர் = தாஸர்களிடம் அன்புகாட்டுகிறவர். ஸுஹிருத்து = கைம்மாறின்றி அருள்புரிகின்றவர். உலகத்தில் அத்தகைய நண்பர்கள் உளர். ஆனுல், தாங்கள் பரதேவதை = சிறந்த தெய்வம். அடியார்களுடைய துன்பங்களை தொலைக்கும் வன்மை உங்களுடைய லீலாவிபூதிகளுக்கே இருக்கையில், உங்களையே தெய்வமாகக் கொண்டாடுகிறவர்களுடைய பாக்கியம் எத்தகையது?

[ துக்கங்கள் நேருகையில் அதற்குப் பரிகாரமும் உலகில் பிரசித்தமாகவிருக்கையில், அதனைப் பின்பற்றாது 'தாஸ்யபக்தியையே' ஏன் பின்பற்றவேண்டும்? என்ற ஆட்சேபகதிற்கு விடை கூறுகையில், சில உதாரணங்களால் பக்தியைவிட சிறந்த உபாயமில்லை என்று விளக்குகிறார் :—

बालस्य नेह शरणं पितरौ नृसिंह
नार्तस्य चागदमुदन्वति मज्जतो नौः ।
तप्तस्य तत्प्रतिविधिर्य इहाञ्जसेष्ट-
स्तावद्विभो तनुभृतां त्वदुपेक्षितानाम् ॥ १२

பாலஸ்ய நேஹ சரணம் பிதரௌ ந்ருஸிம்ஹ
நார்த்தஸ்ய சாகதமுதன்வதி மஜ்ஜதோ நௌ: ।
தப்தஸ்ய தத்ப்ரதிவிதிர்ய இஹாஞ்ஜஸேஷ்ட-
ஸ்தாவத்விபோ தநுப்ருதாம் த்வதுபேக்ஷிதாநாம் ॥ 12

ஹே விபுவே = பரிபூர்ணரே! தாங்கள் உபேக்ஷை செய்தால் பிராணிகளுடைய துன்பங்களை வேறு உபாயங்கள் அறவே அறுப்பதில்லை தங்களுடைய அருள் இல்லாவிடில் தாய்தந்தையர்கள் சேயை பாதுகாக்கமுடியாது. (அஜீகர்த்தன் என்பவரை தந்தை திபாகம செய்தார். தங்களுடைய அருளன்றோ அவரைக் காப்பாற்றியது. ஹே நாஸிம்மரே! என் தந்தை என்னைக் கொல்ல முயன்றார். தாங்களன்றோ காப்பாற்றினீர்கள். ஆகையால், சேயின் பாதுகாப்பிற்கு தாய்தந்தையர்களின் அன்பு பயனற்றது. அவர்களுடைய வெறுப்பும் பயனற்றது.) ஸமுக்திரத்தில் கப்பலில் பிரயாணம் செய்பவனுக்கும், வியாதிக்கு மருந்து அருந்துகிறவனுக்கும் உங்களுடைய அருள் நிரம்பியிருக்கையில்தான் அவை பயனளிக்கும். தாங்கள் உபேக்ஷை செய்தால் அந்த உபாயங்கள் பயனளிப்பதில்லை என்பது திண்ணம். (மருந்

தருந்தியும் வியாதி நீங்காமையைக் கண்டும், கப்பலில் பிரயாணம் செய்கையில் ஸமுத்திரத்தில் மூழ்குவதைக்கண்டும் அதிருஷ்டமில்லை என்று கூறுதல் உலகப்பிரசித்தம். அந்த அதிருஷ்டம்தான் பரமனுடைய அருள். அந்த அருள் ஒன்றுதான் துன்பங்கள் தொலைய இன்றியமையாதது என்பதை பக்தசிகாமணியாகிய பிரஹ்லாதர் தனது அனுபவத்தினலேயே உணர்த்துகிறர்.)

[சில இடத்தில் எக்காரணத்தினலாவது, யாராலாவது, எப்பொழுதாவது, யாராவது பாதுகாக்கிறவன் கிடைப்பதும் பகவானுடைய உருவமேயாகும் என்று கூறுகிறர்:—

यस्मिन्यतो यर्हि येन च यस्य यस्मात्
यस्मै यथा यदुत यस्त्वपरः परो वा ।
भावः करोति विकरोति पृथक्स्वभावः
संचोदितस्तदखिलं भवतःस्वरूपम् ॥ १३

யஸ்மின்யதோ யர்ஹி யேன ச யஸ்ய யஸ்மாத்
யஸ்மை யதா யதுத யஸ்த்வபர: பரோ வா ।
பாவ: கரோதி விகரோதி ப்ருதக்ஸ்வபாவ:
ஸம்சோதிதஸ்ததகிலம் பவத: ஸ்வரூபம் ॥ 13

தாழ்ந்த ஜீவனகிய வேறு யாராயினும், உயர்ந்த ஜீவனகிய பிரம்மனயினும், மற்ற எந்தப் பொருளாயினும் தனிப்பட்ட தன்மையுடையதாக அந்தவிடத்தில், எப்பொழுது, எதன் உதவியால், யாருடையதாக, எக்காரணத்தினல, எதற்காக, எவ்விதத்திலும் எதைச் செயதாலும, எவ்வித மாறுதலை அடைந்தாலும அந்தச் செயல மாறுதல் முதலிய யாவும் உங்களுடைய பிரேரணையினல் நிலவுகிறதுமன்றி அப்பொருள்கள் யாவும் உமது உருவமேயாகும். தாங்களே அந்தந்தப் பொருள்களாக மாறுதலடைந்து செயலாற்றுகிறீர்கள்

[ஆகையால், காப்பாற்றுபவன் வேறு ஒருவனுமில்லாமையால் நித்யமுக்தரும் நித்யானந்தரூபியுமாகிய தாங்களே என்னை காப்பீர்களாக என்று இரண்டு செய்யுட்களால் வேண்டுகிறார் :—

माया मनः सृजति कर्ममयं बलीयः
कालेन चोदितगुणानुमतेन पुंसः ।
छन्दोमयं यदजयार्पितषोडशारं
संसारचक्रमज कोऽतितरेत्त्वदन्यः ॥ १४

स त्वं हि नित्यविजितात्मगुणः स्वधाम्ना
कालो वशीकृतविसृज्यविसर्गशक्तिः ।
चक्रे विसृष्टमजयेश्वर षोडशारे
निष्पीड्यमानमुपकर्ष विभो प्रपन्नम् ॥ १५

மாயா மன: ஸ்ருஜதி கர்மமயம் பலீய:
காலேன சோதிதகுணாऽநுமதேன பும்ஸ: ।
சந்தோமயம் யதஜயார்பிதஷோடசாரம்
ஸம்ஸாரசக்ரமஜ கோऽதிதரேத்வதன்ய: ॥ 14

ஸ த்வம் ஹி நித்யவிஜிதாத்மகுண: ஸ்வதாம்னா
காலோ வசீக்ருதவிஸ்ருஜ்யவிஸர்கசக்தி: ।
சக்ரே விஸ்ருஷ்டமஜயேச்வர ஷோடசாரே
நிஷ்பீட்யமானமுபகர்ஷ விபோ ப்ரபன்னம் ॥ 15

உமது அம்சமாகிய புருஷனுடைய ஸங்கற்பமாகிய அருளினால் தூண்டப்பட்டு மாயை தக்ககாலத்தில் ஸத்வராஜஸ் தமோகுணங்களின் மாறுதலைப் பெற்று கர்மவாஸனைகளுடன் கூடிய மனதை சிருஷ்டிக்கிறது. அந்த மனம், வேதங்களிலும் மற்ற நூல்களிலும் கூறும் வேள்விமுதலிய நற்செயல்களில் பற்றுள்ளதாகவும், ஞானேந்திரியங்கள் 5, காமேந்

திரியங்கள் 5, பிராணன்கள் அல்லது பூதங்கள் 5, அஹங்காரம் ஆகிய 16 பொருள்களும் ஒன்றுசேர்ந்து அநுபவிக்கும் இன்பதுன்பங்கள் நிரம்பிய ஸம்ஸாரமாகிய சக்கிரத்தில் அகப்பட்டு துன்பமுறுகையில் அதிலிருந்து விடுவித்தல் தங்களைத்தவிர மற்ற யாரால் ஏற்படும்? தாங்கள் ஜீவனைப்போன்றவரல்ல. தமது மகிமையால் குணங்கள் யாவற்றையும் அடக்கி ஆள்கிறீர்கள். ஜீவன் குணங்களுக்குக் கீழ்ப்படிந்தவன். தாங்கள், சிருஷ்டிக்கப்பட்ட பொருள்களுடையவும், கருவிகளுடையவும் சக்தியை ஸ்வாதீனத்தில் வைத்திருக்கும் காலரூபி. ஜீவன், ஸாதனங்களுக்கும் பயன்களுக்கும் அதீனமானவன் ஆகையால், விபுவே=எல்லாம் வல்லமையுள்ளவரே! யந்திரத்தில் வைக்கப்பட்ட கரும்பு ஜல்லைபோல் ஸம்ஸாரசக்கிரத்தில் சிக்கிக்கொண்டு கசக்கிப் பிழியப்படுகின்ற நான் தங்களையே சரணமடைந்தமையால், கைதூக்கிக் காப்பாற்றுவீர்களாக.

[உலகபாலகர்கள் அனுபவிப்பதுபோல் இன்பங்களை அனுபவிப்பாயாக. தந்தை அனுபவித்த ராஜ்யபோகத்தை யளிக்கிறேன். அத்தகைய சுகத்திற்கு ஏன் அஞ்சுகிறாய்? என்று வினா எழ அதற்கு விடையளிக்கிறார்:—

दृष्टा मया दिवि विभोऽखिलधिष्ण्यपाना-
मायुः श्रियो विभव इच्छति याञ्जनोऽयम् ।
येऽस्मत्पितुः कुपितहासविजृम्भितभ्रू-
विस्फूर्जितेन लुलिताः स तु ते निरस्तः ॥ १६

த்ருஷ்டா மயா திவி விபோऽகிலதிஷ்ண்யபானா-
மாயு: ச்ரியோ விபவ இச்சதி யாஞ்ஜனோऽயம் ।
யேऽஸ்மத்பிது: குபிதஹாஸவிஜ்ரும்பிதப்ரூ-
விஸ்பூர்ஜிதேன லுலிதா: ஸ து தே நிரஸ்த: ॥ 16

ஹே விபுவே = எல்லா வல்லமையுமுள்ளவரே! இவ்வுல கிலுள்ள ஜீவன் விரும்பக்கூடிய லோகபாலர்களுடைய ஆயுள். செல்வம், மற்ற இன்பங்கள் யாவற்றையும் நான் கண்டேன், உலோகபாலர்கள் எந்த இன்பங்களை அனுபவித்தனரோ, அவைகள் என் தந்தையின் கோபத்தாலுண்டான அட்டகா சம் செய்து புருவங்களை நெறித்தலினல் அவர்களால் இழக் கப்பட்டன. என் தந்தையின் அதீனத்திலிருந்த அவை யாவும் ஒரு நொடியில் தங்களால் ஸ்வாதீனம் செய்து கொள்ளப்பட்டன. ஆகவே, அவைகளின் அழிவு என் னுல் கண்ணுறப்பட்டது.

तस्मादमूस्तनुभृतामहमाशिषो ज्ञ
आयुःश्रियं विभवमैन्द्रियमाविरिञ्चात् ।
नेच्छामि ते विलुलितानुरुविक्रमेण
कालात्मनोपनय मां निजभृत्यपार्श्वम् ॥ १७

தஸ்மாதமூஸ்தநுப்ருதாமஹமாசிஷோ ஜ்ஞ
ஆயு:ச்ரியம் விபவமைந்த்ரியமாவிரஞ்சாத் ।
நேச்சாமி தே விலுலிதானுருவிக்ரமேண
காலாத்மனோபநய மாம் நிஜப்ருத்யபார்ச்வம் ॥ 17

ஆகையால், பிராணிகளின் இன்பங்களையும், ஆயுளை யும், செல்வத்தையும், இந்திரியசுகங்களையும் அறிந்த நான் பிரம்மதேவருடைய போகம உட்பட யாவையும் காலரூபியா கிய உமது பராக்கிரம்த்தால் அழிவுடையவை என்று உ ணர்நதமையால் விரும்புகிறதில்லை. தங்களுடைய அடியார் களின் அண்மையில் என்னை அழைத்துக்கொள்வீர்களாக.

कुत्राशिषः श्रुतिसुखा मृगतृष्णिरूपाः
क्वेदं कलेबरमशेषरुजां विरोहः ।

निर्विद्यते न तु जनो यदपीति विद्वान्
कामानलं मधुलवैः शमयन्दुरापैः ॥ १८

குத்ராசிஷ: ச்ருதிஸுகா ம்ருகத்ருஷ்ணிரூபா:
க்வேதம் களேபரமசேஷருஜாம் விரோஹ: ।
நிர்வித்யதே ந து ஜநோ யதபீதி வித்வான்
காமானலம் மதுலவை: சமயந்துராபை: ॥ 18

செவிகளால் கேட்கும்பொழுதுமட்டும் ஆனந்தத்தை அளிக்கின்றவைகளும், கானல் ஜலத்திற்கு நிகரானவைகளுமான போகங்கள் எங்கே! எல்லா வியாதிகளுக்கும் விளை பூமியாகிய இந்த உடல் எங்கே! இவைகளின் நிலையற்ற நிலைமையை அறிந்தும் மனிதன் அரிய தேன்துள்ளிபோன்ற சிற்றின்பங்களால் காமமாகிய பெருந்தீயைத் தணிக்க விரும்புகிறான். காமத்தைத் தணிக்கத் தணிகிறவனுக்கு சிற்றின்பங்களில் விருப்பம் நீங்கி வைராக்கியம் பெறுவதற்கு பண்பு உண்டாவதில்லை தங்களுடைய மாயையின் வன்மையே இதற்குக் காரணம்.

[விவேகத்தைப் பெற்றும் விஷயசுகங்களில் பற்று நீங்கி வைராக்கியம் உண்டாகுவதற்கு பகவானுடைய அருள்தான் மூலகாரணம் என்கிறார் :—

क्वाहं रजःप्रभव ईश तमोधिकेऽस्मिन्
जातः सुरेतरकुले क्व तवानुकम्पा ।
न ब्रह्मणो न तु भवस्य न वै रमाया
यन्मेऽर्पितः शिरसि पद्मकरः प्रसादः ॥ १९

க்வாஹம் ரஜ:ப்ரபவ ஈச தமோதிகே$ஸ்மின்
ஜாத: ஸுரேதரகுலே க்வ தவானுகம்பா ।
ந ப்ரம்மணோ ந து பவஸ்ய ந வை ரமாயா
யன்மே$ர்பித: சிரஸி பத்மகர: ப்ரஸாத: ॥ 91

ஹே ஈச! ரஜோகுணத்திற்குத் தங்குமிடமும் தமோ குணம் மேலிட்டதுமாகிய அசுரஜாதியில் பிறந்த நான் எங்கே! உங்களுடைய அருள் எங்கே! இரண்டிற்கு வெகு தூரம். ஆயினும், உமது நாபியிலிருந்து தோன்றிய பிரம்மனுக்கும், (வைஷ்ணவானும் யதா சம்பு:=விஷ்ணுபக்தர்களில் பரமசிவன் சிறந்தவர்) என்ற பிரமாணப்படி உயர்ந்த பக்தராகிய பரமசிவனுக்கும், இணைபிரியாத பிரிய மனையாளாகிய திருமகளுக்குங்கூட அரிதான அருள் எனக்குப் புரிந்தீரன்றோ! தாமரைபோன்ற கரங்களை என் தலையில் வைத்தீரன்றோ! [அந்த கரங்களின் அழகும், மிருதுத் தன்மையும், குளிர்ச்சிகுணமும் வர்ணிக்க இயலாது. அருளுக்குரியவர்களுக்கே கிட்டாத பாக்கியம் கிடைத்ததின் பயன்தான் நான் அடைந்த வைராக்கியம்.]

[தாங்கள் இவ்விதம் அருளியதில் வியப்பில்லை என்று விளக்குகிறார் :—

नैषा परावरमतिर्भवतो ननु स्या-
ज्जन्तोर्यथाऽऽत्मसुहृदो जगतस्तथापि ।
संसेवया सुरतरोरिव ते प्रसादः
सेवानुरूपमुदयो न परावरत्वम् ॥ २०

நைஷா பராவரமதிர்பவதோ நனு ஸ்யாஜ்-
ஜந்தோர்யதாऽऽத்மஸுஹ்ருதோ ஜகதஸ்ததாபி ।
ஸம்ஸேவயா ஸுரதரோரிவ தே ப்ரஸாத:
ஸேவானுரூபமுதயோ ந பராவரத்வம் ॥ 20

இவன் உயர்ந்தவன், இவன் தாழ்ந்தவன் என்ற வேற்றுமை ஜீவாத்மாவிற்கு இருப்பதுபோல் தங்களுக்கு ஏற்றத்தாழ்வு புத்தி ஒருவரிடத்திலும் இல்லை. எல்லா ஆத்மாக்களுக்கும் உலகமனைத்திற்கும் தாங்கள் ஆத்மா. ஸுஹி

ருத்து = உற்ற நண்பர். கற்பகவிருக்ஷத்தை பஜிக்கின்றவர்களுக்கு தக்க அருள் கிடைப்பதுபோல் தங்களை பஜிக்கின்றவர்களுக்கு அந்த பக்திக்கும் விருப்பத்திற்கும் உரிய பயன்கள் மேல்கீழாக இருந்தபோதிலும் அந்த வேற்றுமை உங்களைச் சார்ந்ததன்று.

[இந்த அருள் எனக்கு நிலவியதன் காரணம் தங்களுடைய பக்தராகிய நாரதமுனிவரேயாவார். ஆதலால், என்னை அடியார்களுடைய அண்மைக்கே அழைத்துச்செல்லுவீர் என்று வேண்டுகிறார்:—

एवं जनं निपतितं प्रभवाहिकूपे
कामाभिकाममनु यः प्रपतन् प्रसङ्गात् ।
कृत्वाऽऽत्मसात्सुरर्षिणा भगवन् गृहीतः
सोऽहं कथं नु विसृजे तव भृत्यसेवाम् ॥ २१

ஏவம் ஜனம் நிபதிதம் ப்ரபவாஹிகூபே
காமாபிகாமமனு ய: ப்ரபதன் ப்ரஸங்காத் ।
க்ருத்வாऽऽத்மஸாத்ஸுரர்ஷிணா பகவன் க்ருஹீத:
ஸோऽஹம் கதம் நு விஸ்ருஜே தவ ப்ருத்யஸேவாம் ॥ 21

ஹே பகவன்! இத்தருணத்தில் தாங்கள் அருளியது போலவே, தேவரிஷியாகிய நாரதமுனிவர், யான் தாயின் கர்ப்பத்தில் இருக்கையில் என்னை அநுக்கிரகம் செய்தார். பிறப்புக்களாகிய பாம்புகள் நிரம்பிய ஸம்ஸாரமாகிய கிணற்றில் விழுந்து, சிற்றின்பங்களிலேயே ஈடுபட்டு துன்பங்களை அநுபவிக்காமலிருக்கும்படி தேவரிஷியாகிய நாரதமாமுனிவர் என்னை ஏற்றுக்கொண்டு அருள்புரிந்ததின் பயனன்றோ தங்களுடைய அனுக்கிரகம். அத்தகைய நான் தங்களுடைய அடியார்களின் சேவையை எவ்வாறு கைவிடுவேன்?

[தங்களுடைய இச்செயல் எனது அனுக்கிரகத்திற்காக இல்லை, ஏனெனில்,

मत्प्राणरक्षणमनन्त पितुर्वधश्च
मन्ये स्वभृत्यऋषिवाक्यमृतं विधातुम् ।
खड्गं प्रगृह्य यदवोचदसद्विधित्सु-
स्त्वामीश्वरो मदपरोऽवतु कं हरामि ॥ २२

மத்ப்ராணரக்ஷணமனந்த பிதுர்வதச்ச
மன்யே ஸ்வப்ருத்யரிஷிவாக்யம்ருதம் விதாதும் ।
கட்கம் ப்ரக்ருஹ்ய யதவோசதஸத்விதித்ஸு-
ஸ்த்வாமீச்வரோ மதபரோऽவது கம் ஹராமி ॥ 22

ஹே அனந்த = எல்லையற்றவரே! என்னுடைய உயிரை பாதுகாத்தல், என் தந்தையை கொலைசெய்தல் என்ற செயல்கள் தமது பக்தராகிய நாரதமுனிவருடைய வசனத்தை உண்மையாக்குவதற்காகவே நிலவின. என் தந்தை வாளை உயர்த்தி என்னை கொல்ல விரும்பியவராக "உனது தலையை வெட்டுகிறேன். உன் உயிரை பாதுகாப்பவன் என்னைவிட வேறு ஒருவன் இருந்தால் அவர் காப்பதை நான் பார்க்க விரும்புகிறேன்" என்று கூறினர். அவருடைய விருப்பத்தைப் பூர்த்திசெய்வதற்காகவே என்னைக் காப்பாற்றி அருளினீர். (வைகுண்டலோகத்தில் துவாரபாலகனாகவிருந்து ஸனகாதிகளுடைய சாபத்தால் அசுரப்பிறவியை அடைந்த போதிலும், அந்த ஹிரண்யகசிபு பகவானுடைய பக்தன, ரிஷிக்குச் சமமானவன் என்று கருத்து)

[உலகங்களுக்கெல்லாம் ஆத்மாவாகிய தங்களுடைய இந்தச் செயல் மாயையினாலேயேயன்றி சுபாவமல்ல என்று கூறுகிறார்:—

एकस्त्वमेव जगदेतदमुष्य यत्त्व-
माद्यन्तयोः पृथगवस्यसि मध्यतश्च ।

सृष्ट्वा गुणव्यतिकरं निजमाययेदं
नानेव तैरवसितस्तदनु प्रविष्टः ॥ २३

ஏகஸ்த்வமேவ ஜகதேததமுஷ்ய யத்வ-
மாத்யந்தயோ: ப்ருதகவஸ்யஸி மத்யதச்ச ।
ஸ்ருஷ்ட்வா குணவ்யதிகரம் நிஜமாயயேதம்
நானேவ தைரவஸிதஸ்ததனு ப்ரவிஷ்ட: ॥ 23

இந்த உலகம் யாவும் நீங்கள் ஒருவர்தான். உங்களைத் தவிர வேறில்லை. இது தோன்றுவதற்கு முன்பும், கடைசியிலும், உலகம் மறைந்தபோதிலும் தாங்கள் மட்டும் மீதியாக இருக்கிறீர்கள். "ஆதாவந்தே ச யந்நாஸ்தி வர்த்தமானேபி தத்ததா" என்று நியாயம். முன்னும் பின்னும் யாது இல்லாததோ அது மத்தியில் தோன்றியபோதிலும் நிலையுள்ளதல்ல=ஸத்யமல்ல என்று அதன் பொருள். ஆகையால் என்றும் ஸத்யரூபமாகிய தாங்கள் மாயையினுல் இந்த உலகத்தைப் படைத்து அதனுட்புகுந்து பற்பல தோற்றமுள்ளவர்போல் காண்கிறீர் என்று சான்ருேர்களால் நிச்சயமாக அறியப்பட்டுள்ளீர்.

[இந்த உலகம் நான்தான் என்று கூறுகையில், உலகத்திற்குள்ள வேற்றுமை என்னுடையது என்ற குறை நிலவும் என்ருல், அவ்வாறு இல்லை என்று கூறுகிருர்:—

त्वं वा इदं सदसदीश भवांस्ततोऽन्यो
माया यदात्मपरबुद्धिरियं ह्यपार्था ।
यद्यस्य जन्म निधनं स्थितिरीक्षणं च
तद्वै तदेव वसुकालवदष्टितर्वोः ॥ २४

த்வம் வா இதம் ஸதஸதீச பவாம்ஸ்ததோऽன்யோ
மாயா யதாத்மபரபுத்திரியம் ஹ்யபார்த்தா ।

யத்யஸ்ய ஜன்ம நிதனம் ஸ்திதிரீக்ஷணம் ச
தத்வை ததேவ வஸுகாலவதர்ஷ்டிதர்வோ: ॥ 24

ஹே ஈச! காரியகாரணரூபங்களையுடையதாகிய இந்த உலகம், தங்களைத்தவிர வேறில்லை. ஆனால், தாங்கள் உலகங்களுக்கு வேறுபட்டவர். உலகத்தின் தோற்றத்திற்கும் அழிவிற்கும் முன்னும் பின்னும் தாங்கள் மட்டுமிருப்பதால், பிறகு தோன்றிய உலகம் தாங்களே; ஆயினும், ஒரே நிலையுள்ள உங்களுடைய மாறுபட்ட உருவமாக மாயையினால் விகாரமடைந்த உலகில், 'நான்', 'பிறன்' என்ற வேற்றுமையெண்ணம் மாயையினால் உண்டாவதனால், பாரமார்த்திகமன்று = உண்மையன்று. எதிலிருந்து ஒரு பொருளின் உற்பத்தியும், தோற்றமும் உண்டாகின்றனவோ, (தோன்றிய) அந்தப் பொருள், அதில்தான் = காரணத்தில்தான் இருக்கிறது. கடைசியில் அந்த காரணப்பொருளிலேயே லயமடைகிறது. பல கிளையும், தழைகளுமாகத் தோன்றிய போதிலும் மரம் விதையன்றி வேறல்ல. பொன்னின் விகாரமாகிய நகைகள் பற்பலவாயினும், மண்ணின் விகாரமாகிய பாத்திரங்கள் பலவாயினும் காரணமாகிய பொன், மண் அலலாது வேறில்லை. மோதிரம், பதக்கம், குடம், சட்டி என்று பெயர்கள் மட்டும் மாறுகின்றன (என்று விளக்கம்).

[பிரளயகாலத்தில், காரிய பிரபஞ்சத்திற்கு நாசம் ஏற்பட்டபோதிலும், பரமனுக்கு நாசமில்லாமையால், பரமனுடைய நிலைமை உண்மையென்று கூறுகிறார்:—

न्यस्येदमात्मनि जगद्विलयाम्बुमध्ये
शेषे त्मना निजसुखानुभवो निरीहः ।
योगेन मीलितदृगात्मनि पीतनिद्र-
स्तुर्ये स्थितो न तु तमो न गुणांश्च युंक्षे ॥ २५

ந்யஸ்யேதமாத்மனி ஜகத்விலயாம்புமத்யே
சேஷே த்மனு நிஜஸுகானுபவோ நிரீஹ: ।
யோகேன மீலிதத்ருகாத்மனி பீதநித்ர-
ஸ்துர்யே ஸ்திதோ ந து தமோ ந குணும்ச்ச யுங்க்ஷே ॥ 25

பிரளயகாலத்தில் இந்த உலகமனைத்தையும் லயமடையும்படிச் செய்து, செயலற்றவராகவும், நித்தியானந்தரூபியாகவும் துயிலுகின்றீர். ஜீவனைப்போல் துயிலுகின்றவரல்லர். யோகநித்திரையை அநுபவிக்கின்றீர். ஸத்வரஜஸ்தமோகுணங்களுடன கூடிய த்ரிமூர்த்திகளைக்காட்டிலும் மேலான நான்காவது உருவமடைந்தவராகையால், அச்சமயத்தில் தமோகுணத்தையோ, மற்ற விஷயங்களையோ அடைகிறீரில்லை.

[சிருஷ்டிக்கு முன் காரணமாக நிலைத்திருப்பதாக விளக்கிக்கொண்டு, மத்தியகாலத்திலும் அந்தப் பரமன்தான் நிலைத்திருப்பவர் என்று நிரூபணம் செய்கிறுர் :—

तस्यैव ते वपुरिदं निजकालशक्त्या
संचोदितप्रकृतिधर्मण आत्मगूढम् ।
अम्भस्यनन्तशयनाद्विरमत्समाधे-
र्नाभेरभूत्स्वकणिकावटवन्महाब्जम् ॥ २६

தஸ்யைவ தே வபுரிதம் நிஜகாலசக்த்யா
ஸம்சோதிதப்ரக்ருதிதர்மண ஆத்மகூடம் ।
அம்பஸ்யனந்தசயனுத்விரமத்ஸமாதேர்-
நாபேரபூத்ஸ்வகணிகாவடவன்மஹாப்ஜம் ॥ 26

அனந்தன்மீது பள்ளிகொண்டிருந்த தாங்கள் யோகநித்திரையிலிருந்து விழித்துக்கொள்ளுகையில், தங்களுடைய பிரேரணையினுலேயே ஸத்வம், ரஜஸ், தமஸ் ஆகிய

குணங்கள் தாரதம்மியத்தையடைந்து பிரகிருதியின் செயல் நிகழவும், ஸூக்ஷ்மமான விதையிலிருந்து பெரிதான ஆலமரம் தோன்றுவதுபோல், தோன்றிய இவ்வுலகமாகிய தாமரைமலர் உமது உருவமேயன்றி வேறல்ல (மற்றவருடையதுமல்ல).

[இவ்விதம் காரணமாகக் காரியப்பொருளில் ஸம்பந்தப்பட்டுள்ளமையால், உலகம் தோன்றிய காலத்திலும் பகவான்தான் ஸத்தாக விளங்குகிறார் என்று கூறி, இந்த விஷயத்தைப் பிரம்மதேவருடைய அனுபவத்தைப் பின்பற்றி விளக்குகிறார் :—

तत्संभवः कविरतोऽन्यदपश्यमानस्त्वां
बीजमात्मनि ततं स्वबहिर्विचिन्त्य ।
नाविन्ददब्दशतमप्सु निमज्जमानो
जातेऽङ्कुरे कथमुहोपलभेत बीजम् ॥ २७

தத்ஸம்பவ: கவிரதோऽன்யதபச்யமானஸ்த்வாம்
பீஜமாத்மனி ததம் ஸ்வபஹிர்விசிந்த்ய ।
நாவிந்தததப்தசதமப்ஸு நிமஜ்ஜமானோ
ஜாதேऽங்குரே கதமுஹோபலபேத பீஜம் ॥ 27

அந்த பெரும் தாமரைமலரில் தோன்றிய அறிஞரான பிரம்மதேவரும், அந்தப் பத்மத்தைத்தவிர வேறு ஒரு பொருளையும் காணவில்லை. காரணமாகிய தாங்கள் தம்மிடத்திலேயே வியாபித்திருந்ததை உணராமல் வெளியே தேடினர். அநேக வருஷகாலம் ஜலத்தில் வாஸஞ்செய்தும், தேடியும் வெளியில் உமது உருவத்தைக் காணமுடியவில்லை. இதில் வியப்பில்லை. விதை முளைத்த பிறகு கண்ணுக்குத்தோன்றுகிறது எவ்வாறு?

[உபாஸனையின் பயனாக, அந்த பிரம்மதேவர் பரமனை தன்னிடத்திலேயே கண்டார் என்று கூறுகிறார்:—

स त्वात्मयोनिरतिविस्मित आस्थितोऽब्जं
कालेन तीव्रतपसा परिशुद्धभावः ।
त्वामात्मनीश भुवि गन्धमिवातिसूक्ष्मं
भूतेन्द्रियाशयमये विततं ददर्श ॥ २८

ஸ த்வாத்மயோநிரதிவிஸ்மித ஆஸ்திதோऽப்ஜம்
காலேன தீவ்ரதபஸா பரிசுத்தபாவ: ।
த்வாமாத்மநீச புவி கந்தமிவாதிஸூக்ஷ்மம்
பூதேந்ரியாசயமயே விததம் ததர்ச ॥ 28

(பிறகு) அந்த பிரம்மதேவர் வியந்து தாமரையில் வீற்றிருந்து நீண்டகாலம கடும் தவம் செய்தமையால் சுத்தமான மனதையுடையவராக பஞ்சபூதங்களும, ஞானேந்திரியங்களும், கர்மேந்திரியங்களும, மனதும் அமைந்த தன்னிடத்திலேயே, பூமியில் கந்த தன்மாத்திரை இருப்பதுபோல், நீங்கள் வியாபித்திருப்பதை கண்டார். (ஸத்ரூபியான உங்களையே காரணப்பொருளாகவும், தன்னுடலில் வியாபித்திருப்பதாகவும் ஞானதிருஷ்டியால் உணர்ந்தார்.)

[பகவானை உலகத்திற்குக் காரணமான ஈசுவரனென்று அறிந்ததனால், அந்தப் பிரம்மதேவர் கிருதார்த்தரானார் என்று கூறுகிறார்:—

एवं सहस्रवदनांघ्रिशिरःकरोरु-
नासास्यकर्णनयनाभरणायुधाढ्यम् ।
मायामयं सदुपलक्षितसन्निवेशं
दृष्ट्वा महापुरुषमाप मुदं विरिञ्चः ॥ २९

ஏவம் ஸஹஸ்ரவதனாங்க்ரிசிர:கரோரு-
நாஸாஸ்யகர்ணநயனாபரணாயுதாட்யம் ।
மாயாமயம் ஸதுபலக்ஷிதஸன்னிவேசம்
த்ருஷ்ட்வா மஹாபுருஷமாப முதம் விரிஞ்ச: ॥ 29

இவ்வாறு மாயையினால் தோன்றிய உடலின் அமைப்புடன் கூடியவரும், எண்ணிறந்த முகங்கள், கால்கள், தலைகள், கைகள், மூக்குகள், செவிகள், கண்கள் ஆகிய உருப்புக்களுடனும், நகைகள் நிரம்பியதுமாகிய மாபெரும் புருஷனுடைய உருவத்தைக் கண்டு பிரம்மதேவர் உவகையுண்டார்.

[அத்தருணத்தில், அந்த விராட்புருஷன் பிரம்மதேவருக்குச் செய்த அருளைக் கூறுகிறார் :—

तस्मै भवान् हयशिरस्तनुवं च बिभ्र-
द्वेदद्रुहावतिबलौ मधुकैटभाख्यौ ।
हत्वाऽनयच्छ्रुतिगणांस्तु रजस्तमश्च
सत्त्वं तव प्रियतमां तनुमामनन्ति ॥ ३०

தஸ்மை பவான் ஹயசிரஸ்தனுவம் ச பிப்ர-
த்வேதத்ருஹாவதிபலௌ மதுகைடபாக்யௌ ।
ஹத்வாऽனயச்ச்ருதிகணாம்ஸ்து ரஜஸ்தமச்ச
ஸத்வம் தவ ப்ரியதமாம தனுமாமனந்தி ॥ 30

அச்சமயத்தில், வேதங்களுக்குப் பகைவர்களும் மிக்க பலசாலிகளுமாகிய 'மதுகைடபர்கள்' என்ற இரண்டு அசுரர்களைக் கொன்று, அவர்கள் அபகரித்துக்கொண்டுபோன வேதங்களையும் பிரம்மதேவருக்கு அருளினீர்கள். ஏனெனில், அந்த அசுரர்கள் ரஜோகுணமும் தமோகுணமும் நிரம்பியவர்கள். அவை உங்களை அறிந்துகொள்ள இடையூறுகள். ஸத்வகுணம்தான் உங்களுக்குப் பிரியமான உடலென்று மகான்கள் கூறுகின்றனர். (ஆதலால், தங்களை

அறிந்துகொள்வதற்கு இடையூறுகளான அசுரர்களைக் கொல்லவேண்டியதவசியம்.)

इत्थं नृतिर्यगृषिदेवझषावतारै-
लोकान् विभावयसि हंसि जगत्प्रतीपान् ।
धर्मं महापुरुष पासि युगानुवृत्तं
छन्नः कलौ यदभवस्त्रियुगोऽथ स त्वम् ॥ ३१

இத்தம் ந்ருதிர்யக்ருஷிதேவஜ்ஜஷாவதாரைர்-
லோகான் விபாவயஸி ஹம்ஸி ஜகத்ப்ரதீபான் ।
தர்மம் மஹாபுருஷ பாஸி யுகானுவ்ருத்தம்
ச்சன்ன: கலௌ யதபவஸ்த்ரியுகோऽத ஸ த்வம் ॥

ஹே மகாபுருஷரே! இவ்வாறு, தாங்கள் மனிதன், விலங்கு, ரிஷி, தேவன், மீன் ஆகிய பல உடலுடன் அவதாரங்களைச் செய்து உலகத்தின் பகைவர்களை வதை செய்து, யுகங்களுக்கு ஏற்றவாறு அறநெறியைக் காப்பாற்றுகிறீர்கள். கலியுகத்தில் அவ்வாறு அவதாரஞ்செய்யாமல் மறைந்திருப்பதால் த்ரியுகர் = மூன்று யுகங்களில் தோன்றுகிறவர் (தாங்கள்).

[இவ்வாறு பகவானுடைய தத்துவத்தை நிரூபணம் செய்து, தனக்கு அவருடைய மகிமையை அனுஸந்தானம் செய்யத் தகுதியில்லை என்று வருந்தியவராக வேண்டுகிறார் :-

नैतन्मनस्तव कथासु विकुण्ठनाथ
संप्रीयते दुरितदुष्टमसाधु तीव्रम् ।
कामातुरं हर्षशोकभयैषणार्तं
तस्मिन् कथं तव गतिं विमृशामि दीनः ॥ ३२

நைதன்மனஸ்தவ கதாஸு விகுண்டநாத
ஸம்ப்ரீயதே துரிததுஷ்டமஸாது தீவ்ரம் ।

காமாதுரம் ஹர்ஷசோகபயைஷணார்தம்
தஸ்மின் கதம் தவ கதிம் விம்ருசாமி தீன: ॥ 32

ஹே வைகுண்டநாதரே! இந்த மனம் பாபங்களால் கெட்ட நிலையை அடைந்து, வெளிநோக்கம் பெற்று, விருப்பங்களால் குழப்பமடைந்ததாகவும், ஸந்தோஷம், துக்கம், அச்சம், பொன்னாசை, பெண்ணாசை, உலக ஆசை என்பவைகளால் பாதிக்கப்பட்டுமிருக்கிறது. தங்களுடைய சரித்திரங்களைக் கேட்டு ஸந்தோஷமடைவதற்கு துணிவதில்லை. ஆகையால், வருந்திய யான் தங்களுடைய குணாதிசயத்தை எவ்வாறு அனுஸந்தானம் செய்வேன்?

जिह्वैकतोऽच्युत विकर्षति माऽवितृप्ता
शिश्नोऽन्यतस्त्वगुदरं श्रवणं कुतश्चित् ।
घ्राणोऽन्यतश्चपलदृक् क्व च कर्मशक्ति-
र्बह्व्यः सपत्न्य इव गेहपतिं लुनन्ति ॥ ३३

ஜிஹ்வைகதோऽச்யுத விகர்ஷதி மாऽவித்ருப்தா
சிச்னோऽன்யதஸ்த்வகுதரம் ச்ரவணம் குதச்சித் ।
க்ராணோऽன்யதச்சபலத்ருக் க்வச கர்மசக்திர்-
பஹ்வ்ய: ஸபத்ந்ய இவ கேஹபதிம் லுனந்தி ॥ 33

ஹே அச்சுதரே = அழிவற்றவரே! சுவையுள்ள பொருளை நாடி நாவு ஒருபுறத்தில் இழுத்துச்செல்கிறது. பசியினால் வருந்தி வயிறு ஆகாரத்தை மட்டும் விரும்பியபோதிலும், அதில் மட்டும் திருப்திகொள்ளாமல் நாவு அதிக நற்சுவையை விரும்புகிறது. சிற்றின்பப்பற்றோ கூறமுடியாதது. மூக்கு ஒருபுறம், கண் ஒருபுறம், எல்லாவற்றிற்கும் மேலாக வினைகளின் வன்மை வேறு ஒரு புறம் என்றிவ்வாறு மனைவிமார்கள் பலர் ஒரு இல்லறத்தியவனை துன்பப்படுத்துவதுபோல் துன்பமளித்து வதை செய்கின்றன.

[இந்தக் கஷ்டமான நிலைமையை அடைந்தவன் யான் ஒருவன் மட்டுமல்லன், எல்லோரும் இந்த துக்கத்தை அடைந்துள்ளனர். ஆகையால், எல்லோரையும் காப்பாற்ற வேண்டுமென்று கோருகிறார் :—

एवं स्वकर्मपतितं भववैतरण्या-
मन्योन्यजन्ममरणाशनभीतभीतम् ।
पश्यन जनं स्वपरविग्रहवैरमैत्रं
हन्तेति पारचर पीपृहि मूढमद्य ॥ ३४

ஏவம் ஸ்வகர்மபதிதம் பவவைதரண்யா-
மன்யோன்யஜன்மமரணாசனபீதபீதம் ।
பச்யன் ஜனம் ஸ்வபரவிக்ரஹவைரமைத்ரம்
ஹந்தேதி பாரசர பீப்ருஹி மூடமத்ய ॥ 34

இவ்வாறு ஸம்ஸாரமாகிய வைதரணீநதியில் (யமலோகத்திற்குச் செல்லும் நெறியிலுள்ளது) தமது வினைகளின் பயனாக வீழ்ந்து பிறப்பு, இறப்பு, பசி, பிணி முதலியவைகளால் ஒருவருக்கொருவர் கண்டு அஞ்சுகின்றவர்களும், உற்றவர், பகைவர் என்ற வேற்றுமையினால் நட்பு, பகை, கலகம் என்பவைகளில் ஈடுபட்டு துன்பங்களால் மயங்கியவர்களுமாகிய ஜனங்களின் கூட்டத்தைக் கண்ணுற்று, அந்த வைதரணீநதியின் மறுகரையில் ஸஞ்சரிக்கிறவரே! தாங்கள் ('ஐயோ, பாவம்!' என்று மனமிரங்கி) காப்பாற்றுவீராக.

[நான் ஒருவன் எண்ணிறந்த ஜீவர்களை எவ்வாறு காப்பாற்ற வல்லவன்? என்ற ஆக்ஷேபத்திற்கு விடை கூறுகிறார் :—

कोन्वत्र तेऽखिलगुरो भगवन् प्रयास
उत्तारणेऽस्य भवसंभवलोपहेतोः ।

मूढेषु वै महदनुग्रह आर्तबन्धो
किं तेन ते प्रियजनाननुसेवतां नः ॥ ३५

கோன்வத்ர தேऽகிலகுரோ பகவன் ப்ரயாஸ
உத்தாரணேऽஸ்ய ப்வஸம்பவலோபஹேதோ: ।
மூடேஷு வை மஹதனுக்ரஹ ஆர்த்தபந்தோ
கிம் தேன தே ப்ரியஜனானனுஸேவதாம் ந: ॥ 35

ஹே பகவானே! இந்தப் பிரபஞ்சத்தின் உற்பத்தி, பாதுகாப்பு, அழிவு இவைகளுக்குக் காரணமாகிய தங்களுக்கு இந்த விஷயத்தில் கஷ்டம் யாதுள்ளது? எல்லோருக்கும் குருநாதரே=எல்லோருடையவும் அக்ஞானத்தை நீக்கும் வன்மையுள்ளவரே! ஆர்த்தபந்துவே=வருந்தியவருக்கு உற்றபந்துவே! மூடர்கள்மீது அருள்புரிதல் மகான்களுக்கு இயல்பு என்னையும், என்னுடைய நண்பர்களையும் மட்டும் காப்பாற்றும்படி நான் வேண்டுகிறவனல்லன். ஏனெனில், நாங்கள் தங்களுடைய பக்தர்களையே ஸேவித்துக் கொண்டு அவர்களுடைய ஸகவாஸத்திலேயே ஈடுபட்டிருக்கையால் எங்களை பிரபஞ்சத்துன்பங்கள் பாதிப்பதில்லை. ஆகையால், எங்களுக்கு அதுபற்றிக் கவலையில்லை. (உலகம் யாவற்றையும் காப்பாற்றவேண்டும் என்று பக்தசிகாமணியாகிய பிரஹ்லாதஸ்வாமியின் கோரிக்கை.)

[குழந்தாய் பிரஹ்லாதா! உன்னை ஸம்ஸாரக்கடலிலிருந்து கரையேற்றுகிறேன். அதனால், நீ கிருதார்த்ததையைப் பெறுவாய். கவலைகொள்ளாதே! மற்றவர்கள் விஷயத்தில் ஏன் நீ தலையிடுகிறாய்? என்று ஆக்ஷேபம் எழ அதற்கு விடை கூறுகிறார்:—

नैवोद्विजे परदुरत्ययवैतरण्या-
स्त्वद्वीर्यगायनमहामृतमग्नचित्तः ।

शोचे ततो विमुखचेतस इन्द्रियार्थ-
मायासुखाय भरमुद्वहतो विमूढान् ॥ ३६

நைவோத்விஜே பரதுரத்யயவைதரண்யா-
ஸ்த்வத்வீர்யகாயனமஹாம்ருதமக்னசித்த: ।
சோசே ததோ விமுகசேதஸ இந்த்ரியார்த்த-
மாயாஸுகாய பரமுத்வஹதோ விமூடான் ॥ 36

ஹே பர = ஒப்புயர்வற்றவரே! உமது மகிமைகளை கானம் செய்வதனாலுண்டான ஆனந்தக்கடலில் என்மனம் மூழ்கியதனால், தாண்டுதற்கரிதான ஸம்ஸாரமாகிய வைதரணீநதியைப்பற்றி நான் அஞ்சுகிறேனில்லை. தங்களுடைய குணகீர்த்தனம், ஸம்ஸாரக்கடலை தாண்டுவதற்கு மிகச் சிறந்த உபாயமாக இருந்தும், அதனை உணராமல் அவிவேகத்தால் புத்தியிழந்து சிற்றின்பங்களையே அனுபவித்து இந்திரியங்களை திருப்திசெய்வதற்காக தாங்கமுடியாத குடும்பபாரமாகிய சுமையைச் சுமக்கின்றனரே மூடர்கள் என்று நினைத்து அவர்களைப்பற்றித்தான் வருந்துகிறேன். (ஆகையால், அவர்கள்மீதும் தமது அருள் இடம்பெற வேண்டும்.)

[ நீ முக்திசுகத்தைப் பெற்றுக்கொள். மற்றவர்களுக்கு முனிவர்கள் தத்துவத்தை உபதேசம் செய்வார்கள். அந்த விஷயத்திலும் உனக்குக் கவலை வேண்டாம்; என்பதற்கு பதில் கூறுகிறார்:—

प्रायेण देव मुनयः स्वविमुक्तिकामा
मौनं चरन्ति विजनेन परार्थनिष्ठाः ।
नैतान् विहाय कृपणान् विमुमुक्ष एको
नान्यं त्वदस्य शरणं भ्रमतोऽनुपश्ये ॥ ३७

ப்ராயேண தேவ முனய: ஸ்வவிமுக்திகாமா
மௌனம் சரந்தி விஜனேன பரார்த்தநிஷ்டா: ।
நைதான் விஹாய க்ருபணான் விமுமுக்ஷ ஏகோ
நான்யம் த்வதஸ்ய சரணம் ப்ரமதோऽனுபச்யே ॥ 37

ஹே தேவரே ! பெரும்பாலும் முனிவர்கள் தங்களுக்கு முக்திசுகத்தை விரும்புகிறவர்களாக ஜனங்கள் இல்லாத காட்டில் தியானம் செய்துகொண்டு பரம்பொருளாகிய உம்மிடமே லயமடைந்தவர்களாக இருக்கின்றனர். (மேலும், தங்களுக்கு முக்திசுகத்தை விரும்புகின்றபடியால் தன்னலம் கருதுகின்ற அவர்கள் பிறருடைய நன்மையில் மனம் செலுத்துவதில்லை என்றும் பொருள் கூறலாம்.) வருந்தத்தக்கநிலையிலுள்ள நண்பர்களை விட்டு எனக்குமட்டும் முக்தி சுகத்தை யான் விரும்புவதில்லை. ஸம்ஸாரதுக்கங்களால் துன்பப்படுகிறவர்களுக்கு பாதுகாப்பளிக்க உங்களைத்தவிர வேறு ஒருவரையும் நான் அறியேன். (சுவயநலம் கருதாமை என்ற சிறந்த குணம் இந்த பக்தசிகாமணியிடம்தான் காணப்படுகிறது என்ற சொல் மிகையாகாது. இந்த விஷயத்தில் இவர் நிகரற்ற வழிகாட்டி என்பது உணரத்தக்கது.)

[மற்றவர்கள், இன்புறுகின்றனர். அப்படியிருக்கையில், வருந்தத்தக்கவர்கள் என்று நீ கூறுவது சரியன்று, என்ற ஓர் ஆக்ஷேபம் எழ, அதற்கு பதில் கூறுகிறார்.—

यन्मैथुनादि गृहमेधिसुखं हि तुच्छं
कण्डूयनेन करयोरिव दुःखदुःखम् ।
तृप्यन्ति नेह कृपणा बहुदुःखभाजः
कण्डूतिवन्मनसिजं विषहेत धीरः ॥ ३८

யன்மைதுனாதி க்ருஹமேதிஸுகம் ஹி துச்சம்
கண்டூயனேன கரயோரிவ து:க்கது:க்கம் ।

த்ருப்யந்தி நேஹ க்ருபணா பஹுது:க்கபாஜ:
கண்டூதிவன்மனஸிஜம் விஷஹேத தீர: ॥ 38

இல்லறவாழ்க்கையில் நிலவும் இன்பங்கள் யாவும் அற்பங்கள். பிய்ப்பெடுக்கும்பொழுது கைகளைச் சொறிந்தால், தற்சமயம் ஆனந்தமேற்படுகிறபோதிலும் முடிவில் உண்டாகும் வேதனை கூறமுடியாததன்றோ! அதுபோலவே, அனுபவிக்கும்பொழுது இன்பம்; செயல் முடிந்தால் சொல்லிற்கடங்காத துக்கம். இவ்வாறு சிற்றின்பங்களின் நிலைமை இருந்தும் அதில் திருப்திகொள்ளாமலிருப்பவர்கள் வருந்தத்தக்கவர்களே; ஆயினும், பகவானுடைய அருளிருப்பவன் ஒருவன்தான் அந்த காமசுகத்தை, பிய்ப்பைப் பொறுத்துக்கொள்வதுபோல் அடக்கிக்கொள்ளுகிறான்; அவன்தான் தீரன்.

[மௌனம் முதலிய ஸாதனங்களைக் கைக்கொண்டால் முக்தி சுகத்தை மற்றவர்களும் அடைவார்கள், என்று கூறுவோமாகில்,

मौनव्रतश्रुततपोऽध्ययनस्वधर्म-
व्याख्यारहोजपसमाधय आपवर्ग्याः ।
प्रायः परं पुरुष ते त्वजितेन्द्रियाणां
वार्ता भवन्त्युत न वात्र तु दांभिकानाम् ॥ ३९

மௌனவ்ரதச்ருததபோऽத்யயனஸ்வதர்மவ்-
யாக்யாரஹோஜபஸமாதய ஆபவர்க்யா: ।
ப்ராய: பரம் புருஷ தே த்வஜிதேந்த்ரியாணும்
வார்த்தா பவந்த்யுத ந வாத்ர து தாம்பிகாணும் ॥ 39

ஹே புருஷ = எல்லோருக்கும் அந்தர்யாமியே! (முன்னமேயே உள்ளவரே!) (1) மௌனம் = பேச்சின்மை, (2) விருதங்கள், (3) கல்வியறிவு, (4) தவம், (5) கல்வி

கற்றல், (6) தனது தர்மங்களைச் செய்தல், (7) பிரஸங்கம் செய்தல், (8) தனிமையில் வசித்தல், (9) ஜபம், (10) ஸமாதி நிஷ்டை என்பவைகள் முக்திக்கு உரிய ஸாதனங்களாயினும் பொறிகளை அடக்காதவர்களுக்கு வாழ்க்கைக்கு மட்டும் உபயோகமாகின்றன. அவைகளை உபயோகம் செய்து வாழ்க்கையை மாத்திரம் நடத்திக்கொள்கின்றனர். வெளியார்பாடம் உள்ளவர்களுக்கு அவைகள் வாழ்க்கைக்கும் பயன்படுவதில்லை.

[மேற்கூறிய பத்து ஸாதனங்கள் உள்ளவர்களாயினும், பயனில் விருப்பற்றுத் தமது கடமைகளைச் செய்தால், பகவானிடத்தில் பக்தி நிலைத்து அவருடைய அருளாலேயே பரனுடைய அறிவு உண்டாகிறது. பக்தி இல்லாவிடில் பகவத்ஞானம் ஏற்படாது என்று மூன்று செய்யுட்களால் விளக்குகிறார்:—

रूपे इमे सदसती तव वेदसृष्टे
बीजाङ्कुराविव न चान्यदरूपकस्य ।
युक्ताः समक्षमुभयत्र विचिन्वते त्वां
योगेन वह्निमिव दारुषु नान्यतः स्यात् ॥ ४०

ரூபே இமே ஸதஸதீ தவ வேதஸ்ருஷ்டே
பீஜாங்குராவிவ ந சான்யதரூபகஸ்ய ।
யுக்தா: ஸமக்ஷமுபயத்ர விசின்வதே த்வாம்
யோகேன வஹ்னிமிவ தாருஷு நான்யத: ஸ்யாத் ॥

விதையும் முளையும்போல காரணமும் காரியமுமாகிய இரண்டு உருவங்களும் உம்முடையதே என வேதங்களில் கூறப்பட்டுள்ளது. உண்மையில் உருவமற்ற உமக்கு காரண காரியங்களாகிய பிரபஞ்சத்தைக்காட்டிலும் வேறு உருவமில்லை. (இந்தப் பிரபஞ்சம், பரமாணு முதலியவைகளால்

ஏற்பட்டதல்ல என்றும் பொருள் கொள்ளலாம்.) பொறிகளை அடக்கிய சான்றோர்கள் பக்தியோகத்தினால் காரண காரியரூபங்களாகிய இந்தப் பிரபஞ்சத்திலேயே (உடலிலேயே) உங்களை தேடுகின்றனர். மரத்தில் மறைந்திருக்கும் அக்னியை கட்டையைக் கடைந்து அடைவதுபோல் இந்த உடலிலேயே மறைந்துள்ள உமது உருவத்தை பக்தியோகத்தினால் அறிந்துகொள்கின்றனர். பக்தியில்லாவிடில் உமது தோற்றமும் அவர்களுக்கு நிலவாது.

त्वं वायुरग्निर्वियदम्बुमात्राः
प्राणेन्द्रियाणि हृदयं चिदनुग्रहश्च ।
सर्वं त्वमेव सगुणो विगुणश्च भूमन्
नान्यत्त्वदस्त्यपि मनोवचसा निरुक्तम् ॥ ४१

த்வம் வாயுரக்னிர்வியதம்புமாத்ரா:
ப்ராணேந்த்ரியாணி ஹ்ருதயம் சிதனுக்ருஹச்ச ।
ஸர்வம் த்வமேவ ஸகுணோ விகுணச்ச பூமன்
நான்யத்வதஸ்த்யபி மனோவசஸா நிருக்தம் ॥ 41

ஹே பூமன் = எங்கும் வியாபித்தவரே! வாயு, அக்னி, ஜலம் (முதலியவைகளும்), அவைகளின் தன்மாத்திரைகளும், பிராணன், இந்திரியங்கள், இருதயம், சித்தம், அகங்காரம் (அவைகளின் அதிஷ்டானதேவதைகள் ஆகிய) யாவும் தாங்களே! ஸகுணமும் நிர்க்குணமுமாகிய யாவும் தாங்களே. மனதினால் அறியக்கூடியதும் வசனத்தினால் புகலக்கூடியதுமாகிய பொருள் தங்களைத்தவிர வேறு யாதொன்றுமில்லை.

[ஆனால், பக்தியற்றவர்கள் தன்னிடமே மறைந்து வியாபித்திருக்கும் தங்களை அறிந்துகொள்வதில்லை என்று

கூறுகிறார் :—

नैते गुणा न गुणिनो महदादयो ये
सर्वे मनःप्रभृतयः सहदेवमर्त्याः ।
आद्यन्तवन्त उरुगाय विदन्ति हि त्वा-
मेवं विमृश्य सुधियो विरमन्ति शब्दात् ॥ ४२

நைதே குணா ந குணினோ மஹதாதயோ யே
ஸர்வே மன:ப்ரப்ருதய: ஸஹதேவமர்த்யா: ।
ஆத்யந்தவந்த உருகாய விதந்தி ஹி த்வா-
மேவம் விம்ருச்ய ஸுதியோ விரமந்தி சப்தாத் ॥ 42

ஹே உருகாய = பலவிதமாக கானம் செய்யப்பட்டவரே! ஸத்வம் முதலிய குணங்களுள்ளவர்களும் அவைகளுக்கு அதிஷ்டானதேவர்களும் அழிவுடன்கூடியவர்கள். இந்திரியங்கள் முதலியவைகளுக்கு அதிஷ்டானதேவர்களாயினும் இறுமாப்புடன்கூடிய அவர்கள் பக்தியின்மையால் தங்களை உண்மையாக அறிந்துகொள்வதில்லை. புத்திமான்களோவெனில், பக்தியின் வன்மையினால் தங்களை உண்மையாக உணர்ந்து மற்றப் பேச்சுக்களிலிருந்து ஓய்வை அடைகின்றனர்.

[பரமனுடைய உண்மையான நிலைமையை நன்கு உணர்ந்து அந்த ஞானம் நிலைத்தவர்களுக்கு, வேதங்களையும் மற்றக் கல்விகளையும் கற்றுக்கொள்ளுதல், வேள்விகளைச் செய்தல் ஆகிய காரியங்கள் அவசியமில்லையென்றும் அவைகளை அப்பியாஸம் செய்தல் கண்டசோஷணமேயாகும் என்று மறைகளின் கருத்து.

यदा ते मोहकलिलं बुद्धिर्व्यतितरिष्यति ।
तदा गन्ताऽसि निर्वेदं श्रोतव्यस्य श्रुतस्य च ॥ इति गीता 2—52.

யதா தே மோஹகலிலம் புத்திர்வ்யதிதரிஷ்யதி ।
ததா கந்தாऽஸி நிர்வேதம் ச்ரோதவ்யஸ்ய ச்ருதஸ்ய ச ॥
என்று பகவத்கீதை—அ. 2, சு. 52.

விஷயங்களில் பற்றடைந்து வியவஹாரங்களை நடத்துகின்ற அக்ஞானமாகிய அழுக்கை, உண்மையான தத்வஞானத்தால் உனது புத்தி அறவே அகற்றிவிட்டால், அப்பொழுது, அர்ஜுனா! கற்கவேண்டியதும் கற்றதுமாகிய கல்வி முடிவுபெறும் என்று கருத்து.]

[ஸ்துதியை முடிக்கிறார் :—

तत्तेऽर्हत्तम नमःस्तुतिकर्मपूजाः
कर्मस्मृतिश्चरणयोः श्रवणं कथायाम् ।
संसेवया त्वयि विनेति षडङ्गया किं
भक्तिं जनः परमहंसगतौ लभेत ॥ ४३

தத்தேऽர்ஹத்தம நம:ஸ்துதிகர்மபூஜா:
கர்மஸ்ம்ருதிச்சரணயோ: ச்ரவணம் கதாயாம் ।
ஸம்ஸேவயா த்வயி வினேதி ஷடங்கயா கிம்
பக்திம் ஜன: பரமஹம்ஸகதௌ லபேத ॥ 43

ஹே அர்ஹத்தம = பூஜிக்கத்தக்கவர்களில் மிகச் சிறந்தவரே! பரமஹம்ஸர்களால் = சிறந்த துறவிகளால் அடையத்தக்கவரும் அவர்களுக்கு அடைக்கலமுமாகிய தங்களிடம் பக்தி நிலைத்தல் (1) வணக்கம், (2) ஸ்துதிசெய்தல், (3) கர்மங்களை அர்ப்பணம் செய்தல், (4) பணிவிடை செய்தல், (5) பாதகமலங்களை ஸ்மரணம் செய்தல், (6) கதைகளை கேட்குதல் ஆகிய ஆறு அங்கங்களுடன் கூடிய தங்களுடைய சேவையின்றி எவ்வாறு மனிதனுக்கு கிடைக்கும்?

[பக்தியின்றி முக்தியில்லை; பணிவின்றி பக்தியில்லை. ஆகையால், என்னை தாங்கள் அடிமையாக்கிக்கொள்ளல் வேண்டும் என்று பக்தசிரோமணியின் பிரார்த்தனை.]

முற்றிற்று.

Printed at The Scholar Press, Palghat.